

“கடவுள் உருவமற்றவரும் உருவமுள்ளவரும் ஆவார். உருவம், அருவம் இவ்விரண்டையும் கடந்தவரும் ஆவார்.”

—ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

# உபகதைகள்

பகவான்

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்

திருவாய்மலர்ந்தருளியவை



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர், சென்னை

1950

விலை அணா 12

# முன்னுரை

உப கதைகள் மக்கள் உள்ளத்திற் பதிந்து அறிவினை விளக்கி அறத்தாற்றுப் படுத்தும் ஆற்றல் வாய்ந்தன; பயத்தினைப்போக்கி வீரத்தினை ஊட்டுவன: துன்பத்தைத் துடைத்து இன்பத்தினைத் துய்ப்பன: வாழ்க்கையை விழுமியதாக்க வல்லன. உப கதைகள் இல்லாத நாடோ காலமோ கிடையாது. தொன்றுதொட்டு எல்லா நாட்டினராலும் கையாளப்பட்டுவருவனவற்றுள் இவையும் ஒன்றாகும். அறிவில் மிக்காரும் வயதிற் பெரியோருமே பெரும்பாலும் இவற்றினைச் சிறுவர்களுக்குச் சொல்வது வழக்கம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் திருவாய் மலர்ந்தருளிய உப கதைகளில் உயரிய பக்தி ஞானம் வைராக்கிய நீதிக்கதைகள் மலிந்து கிடக்கின்றன. தினசரி வாழ்வினைச் சீரியதாக்கச் சிறந்த உபதேசங்கள் இவற்றுள் அடங்கியிருக்கின்றன. சிறுவர் முதல் முதியோர்வரை யாவராலும் மிகவும் எளிதில் அறியக்கூடிய விஷயங்கள் இவ்வுபகதைகளில் காணப்படுகின்றன. இச் சிறு கதைகள் 'உபதேச மொழிகள்' என்ற நூலில் ஒரு பாகமாக உவமைக் கதைகள் என்னும் பெயர்பெற்று வந்துள்ளன. பலரின் விருப்பிற் கிணங்கி அவற்றினைத் தனியாகத் தொகுத்து, தகுந்த தலைப்பெயர்கள் ஒவ்வொரு கதைகளுக்கும் கொடுத்து, **உப கதைகள்** என்ற நாமம் இந்நூலிற்குச் சூட்டப்பெற்றுள்ளது.

நமது வாழ்நாளோ சிறிது. ஆகவே அந்நாட்களை வீணாக்காது நல்லாற்றுப் படுத்தி நலமுறச் செய்வதற்கு இவ்வுபகதைகள் மிகவும் பயன்படக்கூடியன. வாய்க்கால் வழியாக ஓடும நீரினைத் தடுத்து அடைக்க உதவும் கல் போன்று இக்கதைகளும் பிறவியினைப் பயனற்ற வழிகளில் செல்லவிடாது தடுத்துச் சீரிய நெறிக்குக் கொண்டு செல்லும் ஆற்றல் வாய்ந்தன என்பது சொல்லாமல் போதரும்.

'வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்கும் கல்.

1942 **பதிப்பாளர்**

## பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| I. | ஆசாபாசங்களால் விளையும் அபாயம் | 1 |
| II. | காமமே சகல பந்தங்களுக்கும் காரணம் | |
| III. | ஞானத்தின் உயர்வு மாண்மைப் பொறுத்தது | 14 |
| IV. | அறிவிலிகளின் அபாய வேதாந்தம் | 19 |
| V. | மதப்பித்து ... ... | 23 |
| VI. | நம்பிக்கையின் பலன் ... | 29 |
| VII. | சன்னியாசமும் வைராச்யமும் | 49 |
| VIII. | மாயையின் இயல்பு .... | 62 |
| IX. | கடவுளைக் காணல் ... | 67 |

# ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறியருளிய உப கதைகள்

## ஆசாபாசங்களால் விளையும் அபாயம்

### 1. கேட்டதெல்லாம் தரும் கல்பதரு

தேசாந்தரமாய்த் திரிந்து கொண்டு சென்ற ஒருவன் ஒரு நாள் ஒரு பெரிய மைதானத்தை அடைந்தான். அன்று அவன் நெடுந்தூரம் வெயிலில் அலைய வேண்டிய தாயிற்று. மேலும் உடம்பெல்லாம் வியர்வை ஆறாய் ஓட அதிகம் களைப்படைந்தான். தூரத்தில் மரம் ஒன்று நிற்பதைக் கண்டு அதன் நிழலை அடைந்து சிறிது சிரமப் பரிகாரம் செய்வதற்காக உட்கார்ந்தான். 'ஆகா! இப் போது நல்ல மிருதுவான படுக்கை இருந்தால் எவ்வளவு சுகமாய் நான் தூங்குவேன்' என்று எண்ணினான். இந்த எண்ணம் உதித்து மறைவதற்குள்ளாக, ஒரு நல்ல படுக்கை பக்கத்தில் இருக்கக் கண்டான். அது எப்படி அங்கு வந்தது என்பதை அறியாதவனாய்த் திகைத்தான். தான் கல்பதருவின் அடியில் இருக்கிறான் என்பதை அவன் எப்படி அறிவான்? அவன் அடைந்த அதிகக் களைப்பினால் அதனை விசாரித்து அறியாது அதன்மீது ஆனந்தமாய்ப் படுத்துக்கொண்டான். 'உடம்பெல்லாம் வலியிருக்கின் றதே! கை கால்களைப் பிடிக்க இளமங்கையர் இப்போ திருந்தால் எவ்வளவு சுகமாக விருக்கும்' என்று நினைத்

துச் சொல்லிருக்கையில் இரு இளமங்கையர் தனது காலடியில் உட்கார்ந்து பிடித்துக் கொண்டு இருக்கக் கண்டான். அவன் அடைந்த ஆனந்தத்துக்கோர் அளவில்லை. ஆனந்தத்தில் இருப்பவனுக்கு அவர்கள் வந்த அதிசயம் தோன்றுமா? வலி சிறிது குறையவும் பசி உண்டாவதைக் கண்டான். 'என்ன! படுக்கை வேண்டுமென விரும்பினேன். படுக்கை வந்தது. கைகால்களைப் பிடித்து வலி நீக்க இளங் கன்னிகைகளை விரும்பினேன். அவர்களும் கூட இதோ வந்து பிடித்துக்கொண்டு இருக்கிறார்கள். இவையெல்லாம் கிடைத்தபோது பசியாற்றப் பக்ஷணம் வாராதா?' என்று அவன் யோசிக்கு முன் அறுசுவையோடு கூடிய அன்ன பதார்த்தங்கள் தனக்கு முன்னால் இருக்கக் கண்டான். என்ன மாயமாய் இது வந்தது என்பதைக் கருதாது தனது பசியாற அறுசுவைஉண்டியை உண்டு, பிறகும் அப்படுக்கையின்மீது சார்ந்தான். அவனுக்கு வேண்டியது இனி ஒன்றுமில்லாமையால் போலும் அன்று தனக்குண்டாகிய அதிசயச் செயல்களைப்பற்றிச் சிந்தித்து மகிழ்ந்து இருக்கும்போது ஏதோ பயத்தினால், 'தற்செயலாய் ஒரு புலி இப்பொழுது வந்தால்........' என்ற எண்ணம் அவனுடைய உள்ளத்தில் எழுந்த உடனேயே ஒரு பெரிய காட்டுப் புலி அவன் கழுத்தில் பாய்ந்து கடித்து அவனைக் கொன்றுவிட்டது.

இம்மாதிரிதான் உலகவர் எல்லாரும் ஆசா பாசத்தினால் கெடுகின்றார்கள். நீயும் உன்னுடைய தியான காலத்தில் பொருளுக்கும் புகழுக்கும் பிறவற்றிற்கும் விரும்புவாயானால் அவற்றிற் சிலவற்றைப் பெறக்கூடும், ஏன்? கடவுள் விரும்பியதை விரும்பியபடி கொடுக்கும கல்பதரு போன்றவர். எதை அடைய ஒருவன் விரும்புவானோ அத் தேவதரு அதனைக் கொடுக்கும். நீ விரும்பியதைப் பெற்று இன்புற்றிருக்கும் போது 'புலி வந்துவிட்டால்' என்ற மாதிரி, ஒரு பெரிய பயம் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும். அந்தப் புலி—நோய், பிணி, சாக்

சாடு, பொருள், புகழ்போன்ற குறைவுபாடாய், புலியினால் வரும் துன்பத்தினும் பார்க்கப் பன்மடங்கு பெரும் பயங் கரமானதாய் இருக்கும்.

ஆகவே தியானம, பக்தி, ஜபம், சமயாசார ஒழுக்கம் முதலியவற்றால் ஒருவன் மனதினைத் தூய்மைப் படுத்திக் கொண்டு வரும்போது சிறிது சிறிதாக உலக ஆசா பாசங் களை எல்லாம விட வேண்டும்.

## 2. பழக்கவாசனையின் பரமசக்தி

ஒருநாள் ஒரூரில் சாயங்காலச் சந்தை யொன்று கூடிற்று. சில செம்படவப் பெண்கள், தாம் கொண்டு வந்த மீனை அங்கு விற்று விட்டு வீட்டிற்குத் திரும்பிப் போய்க் கொண்டிருந்தனர். முன்னிருட்டு வந்து விட்டது. மழையோ பாட்டம் பாட்டமாகப் பெய்யத் தொடங் கியது. பாவம்! அவர்கள் என்ன செய்வார்கள்! பக்கத் தில் பூக்கடைக்காரனுடைய குடிசை இருப்பதைப் பார்த்து அங்கு ஓடினர். அந்தப் பூககடைக்காரன் மிகவும் நல்லவன். அவன் அங்கு வந்த அப்பெண்களின் பரிதாப கரமான நிலையினைக் கண்டு தனது வீட்டின் ஓர் அறை யைக்காட்டி, வேண்டுமானால் அன்று தங்கவும் அதனை உத வினான். அவர்கள் மிகவும் மகிழ்வுடன் ஏற்று அவ்வறைக் குள் சென்றனர். அந்த அறை கமகம வென்று நறுமணம வீசியதைக் கண்டு, நாலு பக்கமும் பார்த்தார்கள். ஒரு மூலையில் சில பூக்கூடைகள் வைக்கப்பட்டு இருந்தன. அவை, வாடிக்கையாகக் கொடுக்கும் சிலருக்கு மறுநாள் காலையில் கொடுப்பதற்காகவே அங்கு வைக்கப்பட்டன. ஆனால் மீன் வாசனையோடு பழகியவர்களுக்கு நறுமணம வீசும வாசனை எப்படிப் பிடிக்கும்? அது மட்டுமல்லாமல் ஒருக்கால் கண்மூடி விழிக்கவும் முடியாதாயிருந்தது. அவர்களுள் ஒரு புத்திசாலிப் பெண் மற்றவர்களைப் பார்த்து ஒரு யுக்தி சொன்னாள். 'நமக்குத தூக்கமோ வருவதாய் இல்லை. இந்தப் பூக் கூடைகளை எடுத்து

வேறிடத்து வைக்கவோ முடியாது நம்மிடத்திலுள்ள மீன் கூடைகளின்மீது கொஞ்சம் ஜலம் தெளித்து நமது பக்கத்தில் வைத்துக் கொண்டால் அப்பூக்கூடைகளால் உண்டாகும் கஷ்டம் நீங்கும்' என்றாள். யாவரும் அந்த யோசனையை ஏற்று அப்படிச் செய்தனர். உடனே எல்லாப் பெண்களும் குறட்டை விட்டுத் தூங்கி விட்டனர்.

பழக்க வாசனையின் பரம சக்தி இப்படிப் பட்டது தான்! உலக ஆசாபாச எண்ணத்தோடும் வாழ்வோடும் கூடியவர் பரிசுத்த, பற்றற்ற தன்மைகளேயோ தலங்களேயோ நாடினால் அமைதிக் குறைவு சுகக்குறைவு முதலியவற்றோடு கூடியவர்களாய்த்தானே இருப்பார்கள்.

## 3. கள்ளவுள்ளம் களவைக்காணும்

வழியோரத்தில் ஒரு சாது ஒருமுறை சமாதியில் ஆழ்ந்து கிடந்தார். ஒரு திருடன் அவ்வழியாய்ப் போய்க் கொண்டிருக்கும்போது அந்தச் சாதுவைக் கண்டான். 'ஒகோ! இங்கு படுத்துக்கிடப்பவனும் திருடன் போலக் காணப்படுகிறான். இன்று இரவு அவன் சில வீடுகளில் திருடி விட்டு வந்து, களைப்பினால் இங்கு தூங்குகின்றான் போலும். போலீசார் இவனைக் கைது செய்ய இதோ வந்து விடுவார்கள். காலந் தாழ்த்தாது நான் ஓடி மறைவேன்' என்று நினைத்துக்கொண்டு ஓடிப்போய் விட்டான். சில நேரத்துக் குள்ளாக ஒரு குடிகாரன் அங்கு வந்து சேர்ந்தான். சாதுவைப் பார்த்தான். 'ஓகோ! மூக்கு முட்டக் குடித்துவிட்டு இப்பள்ளத்துள் விழுந்து கிடக்கின்றாயோ? என்றாலும் நானும்தான் குடித்திருக்கிறேன்; எனக்குச் சுயபுத்தி நிதானமாய் இருக்கிறது; நான் தள்ளாடி விழமாட்டேன்' என்று பிதற்றிக்கொண்டு போய் விட்டான். கடைசியாக ஒரு சாது அங்கு வந்து அவரைப் பார்த்தார் யாரோ ஒரு பெரிய மகான் சமாதியில் ஆழ்ந்து கிடப்பதைக் கண்டு, அவர் பக்கத்தில் உட்கார்ந்து அவர் மலரடிகளை மிருதுவாக வருடத் தொடங்கினார். (நமது

உலக வாசனைகள் அல்லவோ உண்மையான பய பக்தி தூய்மைகளைத் தெரிய விடாது மூடுகின்றன.)

## 4. செம்படவர் சமாதி நீங்கிய கதை

கௌரங்க சுவாமியின் திவ்ய சரித்திரத்திலிருந்து புரோகிதர்களைப் பற்றிய கதையொன்று குருதேவர் சொல்வதுண்டு. சமாதியிலிருந்த காலத்தில் கௌரங்க சுவாமி ஒரு சமயம் சமுத்திரத்தில் விழுந்துவிட்டார். செம்படவர்கள் அவரை வலைபோட்டு இழுத்துக் கரையேற்றினர். வலையின் மூலமாக கௌரங்க சுவாமியின் சரீர சம்பந்தத்தை இந்தச் செம்படவர்களும் பெற்றார்களாதலால், இவர்களுக்கும் ஒருவித பரவசம உண்டாயிற்று. ஆகவே அவர்கள் வலைகளை அப்பாற்போட்டுவிட்டு ஹரி நாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு உன்மத்தர்களைப் போல அங்குமிங்கும் ஓடத்தலைப்பட்டனர். இவர்களைக் குணபபடுத்த முயன்ற பந்துவர்க்கங்கள் தங்களுடைய முயற்சிகள் பயனற்றுப் போனதைக் கண்டு கடைசியில் கௌரங்க சுவாமியிடம் வந்து தங்கள் துக்கத்தைச் சொல்லிக் கொண்டனர். 'ஒரு புரோகிதர் வீட்டிலிருந்து கொஞ்சம் சோறு கொணர்ந்து இவர்களுடைய வாயில் போடுங்கள்; இந்தப் பரவச நிலை போய்விடும்' என்று கௌரங்க சுவாமிகள் உபாயம் சொல்லித் தந்தார். சுற்றத்தார் அப்படியே செய்யச் செம்படவர்களுக்கிருந்த பக்தி பரவசம் நீங்கிவிட்டது.

## 5. கர்வம் பிடித்த காரியஸ்தன்

ஒரு பணக்காரன் தன்னுடைய சொத்துக்களையெல்லாம் ஒரு காரியஸ்தனிடம் ஒப்புவித்திருந்தான். இந்தச் சொத்துக்கள் யாருடையவை என்று வேறு யாரேனும் கேட்டால் அந்தக் காரியஸ்தன், "இவையெல்லாம் என்னுடையவை. இந்தத் தோட்டம் வீடு முதலியவை எல்லாம் என்னைச் சேர்ந்தவை," என்று வீண் கர்வம் பேசிக் கொண்டு திரிவது வழக்கம். அந்தப் பணக்காரன் ஒரு

குளத்தில் யாரும் மீன் பிடிக்கக் கூடாதென்று கண்டிப்பான உத்தரவிட்டிருந்தான். இந்த உத்தரவை மீறிக் காரியஸ்தன் மீன் பிடித்துக்கொண்டிருந்தபோது எஜமானனே நேரில் வந்து பார்த்துவிட்டான். தனது காரியஸ்தனுடைய அயோக்கியத் தனத்தைக் கண்ட எஜமானன், அவனை வீட்டைவிட்டுத் துரத்தியதன்றி, அவமானப் படுத்தி, அவன் சேர்த்து வைத்திருந்த பணத்தையும் எடுத்துக்கொண்டு விட்டான். சொத்து முழுமையும் தனனுடையதென்று பெருமை பேசிக்கொண்ட காரியஸ்தனுக்கு தனக்குச் சொந்தமான சொம்பு தவலைகளை அடங்கியிருந்த ஒரே ஓட்டைப் பெட்டியைக்கூட எடுத்துப் போக வழியில்லாது போயிற்று. வீண் கர்வத்தினால் வரும் பயன் இதுதான். நம்மிடமுள்ளவனைத்தும் ஆண்டவனுடையது. ஆனால் நாமே அதை மறந்து நமதென்று கர்வங் கொள்கிறோம. அதனால் பகவான் பல சமயங்களில் நம் கர்வமடங்க கஷ்டம் கொடுக்கிறார்.

## 6. அதிக ஆசை அதிக நஷ்டம்

ஒரு யக்ஷன் வாழ்ந்துவந்த மரத்தின்கீழ் ஓர் அம்பட்டன் செல்லும்போது, "உனக்கு ஏழு ஜாடி தங்கம் வேண்டுமா?" என்ற ஒரு குரலைக் கேட்டான். அம்பட்டன் திரும்பிப் பார்த்தான். ஒருவரும் கண்ணுக்குப் புலப்படவில்லை. என்றாலும், 'ஏழு ஜாடி தங்கம்' என்றதனால் பேராசை கொண்ட அம்பட்டன், "எனக்கு வேண்டும்" என்று பதில் சொன்னான். "நீ வீட்டுக்குப் போ, நான் ஜாடிகளை அங்குக் கொண்டுபோய் வைத்துவிட்டேன்" என்ற பதில் குரல் உடனே தொனித்தது. இதைப் பரிசோதிக்க வெண்ணிய அம்பட்டன் குடல் தெறிக்க வீட்டுக்கு ஓடினான். உள் நுழைந்ததும் அவன் முன்னர் ஏழு ஜாடிகள் இருக்கக் கண்டான். அவைகளைத் திறந்து பார்க்க, ஆறு ஜாடிகளில் தங்கம் நிறைந்தும் ஏழாவது ஜாடியில் தங்கம் பாதியளவுமாக இருக்கக் கண்டான். குறைவாக விருக்கும் இந்த ஜாடியையும நிரப்பி

விட வேண்டுமென்ற ஆசை அம்பட்டனுக்கு உண்டா யிற்று. இல்லாவிட்டால் அவன் அடையும் சுகம் பூரண மானதாகாது என்று எண்ணினன். ஆகவே தன்னிட மிருந்த பொன் வெள்ளி நகைகளை யெல்லாம் விற்றுப் பவுனாக்கி அந்த ஜாடியில் போட்டான். என்றாலும், அந்த மாய ஜாடி முன்போலவே அரைகுறையாக இருந்தது. பிறகு அவன் தன்னையும் குடும்பத்தையும் பட்டினி போட் டுச் சம்பாதிக்கும் பணத்தை யெல்லாம் ஜாடியிலேயே போட்டான். அப்படிச் செய்தும் ஜாடி நிறையவில்லை. அப்பால் அவன் தான் சேவித்துவந்த அரசனிடம் சென்று, தன் சம்பளம் காலக்ஷேபத்துக்குப் போதாம லிருக்கிறபடியால் அதை இருமடங்கு அதிகமாக்கும்படிக் கேட்டுக்கொண்டான். அரசனுக்கு இவனிடம் தயவு இருந்தபடியால் கோரிய எண்ணம் நிறைவேறிற்று அம் பட்டன் இந்த அதிகச் சம்பளத்தையும் செலவு செய்யா மல் ஜாடியில் போட்டுவந்தான் அப்போதும் ஜாடி பூர்த்தி யாகவில்லை பிறகு அவன் வேலையில்லாத காலத்தில், பிச்சை யெடுத்து அதனால் கிடைத்த பொருளையும், வேலை யினால் கிடைத்த சம்பளத்தையும பொன்னாக்கி ஜாடியில் போட்டான். என்றாலும் மாய ஜாடி நிரம்பவில்லை! இப் படி அநேக மாதங்கள் கழிந்தன அம்பட்டனுடைய நிலைமை வரவரப் பரிதாபகரமாயிற்று. ஒரு நாள் அரசன் அம்பட்டனுடைய ஸ்திதியைக்கண்டு, “அடே, இப்போது உனக்குக் கிடைக்கிற சம்பளத்தில் பாதி கிடைத்தபோது நீ சந்தோஷமாயும திருப்தியாயும் இருந்தாய். இப்போது அதைவிட இருமடங்கு அதிகமான சம்பளம் வரும்போது நீ ஏன் மங்கிய முகத்துடன் கவலையும் விசாரமும் கொண்ட வனாக இருக்கிறாய்! ஏழு ஜாடித் தங்கத்தை வாங்கிக் கொண்டாயோ?” என்று கேட்டான். அம்பட்டன் ஆச்சரியப்பட்டு, “மகாராஜாவே! சந்நிதானத்துக்கு இந்தச் சங்கதியை யார் தெரிவித்தார்கள்?” என்றான். அதற்கு அரசன், “எவனிடம் யக்ஷனுடைய செல்வம் வந்திருக்கிறதோ அவன் இப்படிப்பட்ட நிலைமைக்கு வரு

வான் என்று தெரியாதா? அவன் இந்த ஏழு ஜாடிகளையும் எனக்குக் கொடுப்பதாகச் சொன்னான். அது 'வரவுப் பணமா, செலவுப் பணமா,' அதாவது அந்தப் பணத்தைச் செலவு செய்யவேண்டியதா, புதைத்து வைக்க வேண்டியதா என்று அவனைக் கேட்டேன்; கேட்டதும் யக்ஷன் பதில் சொல்லாமல் ஓடிவிட்டான்; அந்தப் பணத்தை ஒருவராலும் செலவழிக்க முடியாதென்பதை நீ அறியாயோ? அது இன்னும் சேர்த்துவைக்க வேண்டு மென்னும் ஆசையைத்தான் தரும். உடனே போய்ப் பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிடு" என்றான். அம்பட்டனுக்குப் புத்தி வந்தது. அவன் யக்ஷன் வாழும் மரத்தடிக்குச் சென்று, 'உன் பணத்தை வாங்கிக்கொள்' என்றான். 'நல்லது' என்று யக்ஷன் பதில் சொன்னான். அம்பட்டன் வீட்டுக்குத் திரும்பி வந்ததும், மாயமாய் வந்த ஜாடிகள் ஏழும் மாயமாகவே போய் விட்டதையும், அவைகளுடன் அவன் ஆயுளளவும் கஷ்டப்பட்டுத் தேடிய செல்வமுழுதும் போய்விட்டதையும் கண்டான். ஈசுவர ராஜ்யத்திலும் சிலருடைய நிலைமை இப்படிப்பட்டதாகவே இருக்கிறது. உண்மையான வரவுக்கும் உண்மையான செலவுக்கும் வித்தியாசம் தெரிந்து கொள்ளாதவர்கள் தாங்கள் பெற்றுள்ளவற்றை யெல்லாம் இழந்து விடுகின்றனர்.

## 7. நித்தியகண்டம் பூர்ணாயுசு

ஒரு வெள்ளாடு, தன் தாயுடன் ஆனி மாதத்தில் வெகு உல்லாசமாகத் துள்ளி விளையாடிக் கொண்டிருக்கையில், தாயைப் பார்த்து, "ராஸலீலை என்னும் பண்டிகை காலத்தில் விசேஷமாய்ப் புஷ்பிக்கும் ராஸப் புஷ்பத்தை ஏராளமாகத் தின்று பண்டிகை கொண்டாடப் போகிறேன்" என்றது. அதற்கு அந்தத் தாய் ஆடு, "குழந்தாய்! நீ நினைக்கிறபடி அது அவ்வளவு சுலபமான காரியமன்று, ராஸப் புஷ்பத்தினால் பண்டிகை கொண்டாடுவதற்கு முன்னால் நீ அனேகம் கண்டங்களினின்றும் தப்பிப் பிழைக்க வேண்டியிருக்கிறது. வருகிற புரட்டாசி ஐப்பசி

மாதங்கள் உனக்குப் பொல்லாத காலம். துர்க்கா பூஜைக்கு உன்னை யாராவது பலி கொடுத்து விடுவார்கள். அடுத்துக் காளி பூஜை வருகிறது. அதையும் தப்பினால், ஜகதாத்ரி பூஜை வரும். அப்போது உயிர் தப்பியிருக்கும் எல்லா ஆடுகளையும் பலியிட்டு விடுவார்கள். இந்தக் கண்டங்களுக்கெல்லாம் நீ தப்பிப் பிழைப்பாயானால், கார்த்திகை மாதத்தில் ராஸப் புஷ்பப் பண்டிகையைக் கொண்டாடலாம்" என்று சொல்லிற்று. தாய் ஆடு சொன்னதைப் போல, நமது வாழ்நாளில் நேரிடக்கூடிய கண்டங்களை உணரவேண்டும்; இளமையில் மனத்தில் தோன்றும் எல்லாவித ஆசாபாசங்களும் பூர்த்தியாகக் கூடியவையென நினைத்திருக்கக் கூடாது.

# II

## காமமே சகல பந்தங்களுக்கும் காரணம்

### 8. பற்றற்றவரென்போரது பரிகாச வாழ்க்கை !

கிருகஸ்தாசிரமத்தில் இருந்தபோதிலும் உலகப் பற்றுக்குள் அகப்பட்டுக்கொள்ளாமல் இருக்கக்கூடும் என்று நவீனக் கல்வி கற்ற ஒரு கனவான் பரமஹம்ஸருடன் பேசிக்கொண்டிருந்தார். அப்போது பகவான் அந்தக் கனவானைப் பார்த்து, "உலகப் பற்றில் அகப்பட்டுக் கொள்ளாத கிருஹஸ்தன் எப்படிப்பட்டவன் என்பது உனக்குத் தெரியுமா? யாசகத்தை விரும்பிய ஓர் ஏழையானவன் அவனிடம் வந்து ஏதாவது கேட்டால், 'அப்பா. நான் பணத்தைத் தொடுகிறதில்லை. என்னிடத்தில் யாசகங் கேட்டுக் கொண்டு நீ காலத்தை வீணாகக் கழிக்க வேண்டாம்' என்பான். ஏனெனில், பண வியாபாரங்களில் அவனுக்கு யாதொரு சுதந்திரமும் கிடையாது. எல்லாம் எஜமானியம்மாள் கையை எதிர்பார்த்தே ஆக வேண்டியிருக்கும். யாசகத்துக்கு வந்த பிராமணன் பிடி

வாதமாக நின்று கொண்டிருந்ததால், அதைக் கண்டு இரக்கங்கொண்ட கிரகஸ்தன, அவனுக்கு ஏதாவது கொடுத்துப் போகச் சொல்லலாமென நிச்சயித்துக் கொண்டு, 'நல்லது, அப்பா! நாளைக்கு வா. ஏதாவது தருகிறேன்,' என்கிறான். அப்பால் அவன் உள்ளே சென்று தன் மனைவியை நோக்கி, 'பிரியே! ஓர் ஏழைப் பிராம்மணன் மிகவும் கஷ்டப்படுகிறான். அவனுக்கு ஒரு ரூபாய் கொடுக்கலாம்' என்கிறான். ரூபாய் என்ற வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் கோபங்கொண்ட அவன் மனைவி, 'நீங்கள் வெகு தர்மவான்தான்! கல்லையும் மண்ணையும் போல யோசனையில்லாமல் எடுத்தெறியப்படும் வஸ்துவா ரூபாயும்?' என்கிறாள். கிருஹஸ்தன் மறுபடியும் சற்று மன்றாடி, 'பிரியே! அவன் பரம ஏழை; ஒரு ரூபாய்க்குக் குறைவாகக் கொடுக்கக் கூடாது' என்று சொன்னவளவில் அவன் மனைவி, 'அவ்வளவு என் கையிலில்லை; இதோ இரண்டணா இருக்கிறது. வேண்டுமானால் கொண்டுபோய்க் கொடுங்கள்' என்கிறாள். கிருஹஸ்தனுக்கு உலகப்பற்றே இல்லாதபடியால் தன்னிஷ்டப்படி செய்ய முடியாமல், தன் மனைவி சொற்படி நடக்கவேண்டியவனாகிறான்! ஆகவே அடுத்த நாள் ஏழைப் பிராம்மணனுக்கு இரண்டணாத்தான் கிடைக்கிறது உலகப்பற்றற்றவர்களெனச் சொல்லப்படும் கிருஹஸ்தர்கள் கேவலம் பெண்டாட்டிகள் சொல்கிறபடி கூத்தாடுகிறவர்களேயாவர். குடும்ப விஷயத்தில் அவர்களுக்கு யாதொரு சுதந்திரமும கிடையாது இருந்தபோதிலும அவர்கள் மகான்களென்றும் மிக நல்லவர்களெனவும் நினைத்துக்கொண்டிருக்கின்றனர். வாஸ்தவத்தில் இந்த இரண்டு தன்மைகளும் அவர்களிடம் இல்லை" என்றார்.

## 9. 'கோயில்காளை வண்டிக்காளை' யாதல்

முற்காலத்தில், ஜயபுரியிலிருக்கும் கோவிந்தஜீயின் கோவிலிலுள்ள அர்ச்சகர்கள் கல்யாணம பண்ணிக் கொள்வதில்லை, ஆகவே அவர்கள் ஆத்ம சக்தியால் வெகு

பலம் படைத்தவர்களாக இருந்தனர். ஒரு சமயம் அவ்வூர் அரசன் அவர்களைத் தன்னிடம் வரும்படிச் சொல்லி யனுப்பினான். அவர்கள் போகாமல், 'அரசனைத்தான் எங்களிடம் வரச்சொல்லுங்கள' என்று பதில் அனுப்பினர். அப்பால், அவர்கள் கல்யாணம் பண்ணிக்கொண்டனர். அதன்பின் அர்ச்சகர்களை அரண்மனைக்கு வரவழைக்கவேண்டிய அவசியம் அரசனுக்கு இல்லாது போயிற்று. ஏனெனில், அவர்கள் தாமாகவே அரசனிடம் வந்து, "மகாராஜ்! நாங்கள் ஆசிர்வாதம் செய்ய வந்திருக்கிறோம். சுவாமிக்குச் சாத்திய புஷ்பங்களைக் கொணர்ந்திருக்கிறோம். அங்கிகரிக்கவேண்டும்" என்று சொல்ல வாரம்பித்தனர். இவர்களுக்கு அப்படிப்பட்ட அவசியம நேர்ந்துவிட்டது, பாவம்! அவர்கள் வேறு என்னதான் செய்வார்கள்? ஒரு நாளைக்கு வீடுகட்ட வேண்டியிருந்தது; இன்னொரு நாள் குழந்தைக்கு அன்னப்பிராசனம் செய்யவேண்டியிருந்தது; வேறொரு நாள் பெண்ணுகருக் கல்யாணம் பண்ணவேண்டியிருந்தது இப்படியாக அவர்களுக்கு இடைவிடாத பண முட்டுப்பாடு உண்டாயிற்று. இதனால் ராஜஸபைக்குப் போகவேண்டிய அவசியம் நேர்ந்தது.

பிறர்க்கு அடிமையாக வேலை செய்வதன் பயனை நீங்களே நன்கு உணர்வீர்கள். ஆங்கிலமும் மேனாட்டுப் பயிற்சியும் பெற்ற வாலிபர்களில் அநேகர் பிறர்க்கு அடிமைவேலைசெய்து தங்கள எஜமானர்கள் கொடுக்கும் உதைகளை வாய்பேசாது பெற்று அனுபவிக்கின்றார்கள். ஏன இவ்வளவு அவமதிப்புக்கெல்லாம் அவர்கள் உட்பட்டிருக்கின்றார்கள் என்பது தெரியுமா? இவைகளுக்கெல்லாம் அடிப்படையாக இருப்பது பொதுப்படப் பெண்ணாசையே யாகும்.

## 10. தாசியின் தாசன்

ஓர் ஏழைப் பிராம்மணன் வேலை கிடைக்காமல் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தான். அவன் அடிக்கடி ஒரு

கச்சேரி மானேஜரிடம் சென்று வேலை கொடுக்க வேண்டு மென்று கேட்டான். "இன்றைக்கு இல்லை, நாளைக்கு வா" "பின்னொரு சமயம் வா" என்ற பதில்கள் தான் இவனுக்குக் கிடைத்தன. இப்படி நெடுநாள் சென்றது. ஒருநாள் இவன் தன்னுடைய கஷ்டங்களைத் தன் துணைவன் ஒருவனிடம் சொன்னான். அந்த நண்பன், "என்ன அசட்டுத்தனமான காரியம் செய்து விட்டாய்? அவனிடம் அடிக்கடி சென்று உன் கால் தேய்ந்துபோகும்படி செய்து கொள்வானேன்? ரோஜாமணியிடம்போ. அவளை நயந்து கேள். உனக்கு நாளைக் காலையிலேயே வேலை கிடைக்கும் பார்" என்றான். ஏழைப் பிராம்மணனுக்கு ஆச்சரியமுண்டாயிற்று. 'வாஸ்தவந்தானா? இப்போதே அவளிடம் செல்கிறேன்' என்று சொல்லிக் கொண்டு அவளிடம் போனான். இந்த ரோஜாமணி முன் கூறிய கச்சேரி மானேஜரின் வைப்பாட்டி. ஏழைப் பிராம்மணன் அவளிடம் சென்று, "தாயே! நான் மிகவும் கஷ்டப்படுகிறேன். உன்னைத் தவிர வேறு கதி எனக்குக் கிடையாது. நான் பிராம்மணன்; சம்பாதிக்க வேறு வழி இல்லை. அம்மணி! வேலை இல்லாமல் நெடுநாளாகக் கஷ்டப்படுகிறேன். மனைவி மக்கள் பட்டினியாய்க் கிடக்கிறார்கள். நீ ஒரு வார்த்தை சொன்னால் எனக்கு உத்தியோகம் கிடைக்காமல் போகுமா?" என்றான். பிராம்மணன் கஷ்டப்படுவதைக் கண்டு அவளுக்கு இரக்கம் உண்டாயிற்று. ஆகவே "யாரிடம் சிபார்சு செய்ய வேண்டும்?" என்று அவள் கேட்டாள். "தாயே! கச்சேரி மானேஜரிடம் ஒரு வார்த்தை சொன்னால் எனக்கு உத்யோகம் கிடைப்பது நிச்சயம்" என்றான் பிராம்மணன். ரோஜாமணி அன்றைய இரவே கச்சேரி மானேஜரிடம் சொல்லி வாங்கித்தருவதாக வாக்களித்தாள். ஆச்சரியம்! மறுநாட்காலையில் மானேஜருடைய சேவகன், பிராம்மணனைக் கச்சேரிக்குக் கூட்டிப் போகவந்தான். "இவன் தகுந்த யோக்யதை உடையவன். இவனை வேலைக்கு வைத்துக்கொள்வதால், நமது கச்சேரிக்கு

நன்மையுண்டாகுமென்று எண்ணி இவனுக்கு ஓர் உத்தியோகம் கொடுத்திருக்கிறேன்" என்று மானேஜர் தன் மேலதிகாரிக்குச் சிபார்சு செய்து எழுதினான். புருஷர்களுக்கு ஸ்திரீகள்மீது உண்டாகும் பாசத்தின் மகிமை இப்படிப்பட்டது. உலகம் முழுவதும் பெண்ணாசையிலேயே மயங்கிக் கிடக்கின்றது.

## 11. அவன் அவளுக்கு அடக்கம்

ஓர் ஏழைப் பிராம்மணனுக்குச் செல்வவானான ஜவுளி வர்த்தகன் ஒருவன் சிஷ்யனாக இருந்தான். அவ்வர்த்தகன் பரமலோபி. ஒரு நாள் அந்தப் பிராம்மணன் தனது பாகவத புஸ்தகத்துக்கு உறை போடுவதற்காக, ஒரு சிறு வஸ்திரத்துண்டு வேண்டுமென்று தனது சிஷ்யனிடம் சென்று கேட்டான். வர்த்தகனோ "சுவாமி! தங்களுக்கு இல்லை யென்று சொல்வதற்கு மனம் வருந்துகிறேன். சற்று முன்னால் சொல்லியிருந்தீர்களேயானால் தாங்கள் கேட்டதைக் கொடுத்திருப்பேன். இப்போது என் கைவசம் சிறிய துண்டு ஒன்றும் இல்லையே, என்றாலும், தாங்கள் கேட்டது எனக்கு ஞாபகமிருக்கும். ஆனால், அடிக்கடி மாத்திரம் நினைப்பூட்டுங்கள்" என்று பதில் சொல்லியனுப்பினான். பிராம்மணன் வெறுங்கையனாக வீட்டுக்குத் திரும்பவேண்டியதாயிற்று. குருவுக்கும் சிஷ்யனுக்கும் நடந்த இச்சமபாஷணையை அச்சிஷ்யனுடைய மனைவி பின்னால் இருந்து கேட்டாள். அவள் உடனே ஒரு மனிதனைப் பின்பக்கமாக அனுப்பி பிராமமணனை அழைத்துவரச் செய்து, அவருடன் உள்ளே சென்று, "சுவாமி! என் கணவரிடம் தாங்கள் கேட்டது என்னவோ!" என்று கேட்டாள். நடந்ததைச் சொன்னான் பிராம்மணன். வர்த்தகனுடைய மனைவி, "சுவாமி! தாங்கள் வீட்டுக்குச் செல்லலாம். நாளைக் காலையில் விரும்பிய வஸ்திரம் அங்குவந்து சேரும்" என்று சொல்லியனுப்பினாள். அன்றிரவு வியாபாரி வீட்டுக்கு வந்ததும், அவன் மனைவி 'இன்றைக்குக் கடைமூடியாய்விட்டதா?'

என்று கேட்டான். 'மூடியாய்விட்டது, விசேஷம் என்ன?' என்றான் வர்த்தகன். அதற்கு அவள், "உடனே கடைக்குப்போய் அங்கிருக்கும் விலையுயர்ந்த வஸ்திரங்களில் இரண்டை எடுத்து வாருங்கள்" என்றாள். "என்ன அவசரம்? நாளைக் காலையில் எடுத்துவந்து தருகிறேன்" என்றான் வர்த்தகன். "இல்லை, எனக்கு இப்போதே வேண்டும். இல்லாவிட்டால் வேண்டவே வேண்டாம்," என்றாள் அவன் மனைவி வர்த்தகன் என்ன செய்வான்? பாவம்! வீண் சாக்குப்போக்குகளைச் சொல்லிப் போகச் சொல்லக்கூடிய ஆத்ம குரு அல்லள் இவள். உடனே கீழ்ப்படிய வேண்டிய 'கலியாண மந்திர குரு' ஆவாள். சொன்னதைக் கேட்காவிட்டால், அன்றை இராப்போது பெரும்பாடாக முடியும் என்பதை யுணர்ந்த வர்த்தகன் அந்த நிசியில், மறுபடியும் கடைக்குப்போய், திறந்து, மனைவி கேட்ட வஸ்திரங்களுடன் திரும்பி வந்தான். மறுநாட்காலையில் அவள் அவ்வஸ்திரங்களைக் குருவுக்கு அனுப்பும்போது, "இனிமேல் தங்களுக்கு ஏதேனும் தேவையாக இருந்தால், எனக்குத் தெரிவித்தால், நான் கொடுத்தனுப்புவேன்," என்று சொல்லும்படிக்கு சொல்லி யனுப்பினாள். ஆதலால், ஜகத் பிதாவான ஸர்வேசுவரனைப் பிரார்த்தித்துக் கேட்பதைக் காட்டிலும் தயாளு தன்மையுடைய ஜகன்மாதாவைப் பிரார்த்தித்துக் கேட்டால் விரும்பியதைப் பெறுவது எளிது.

# III

## ஞானத்தின் உயர்வு மனத்தின் மாண்பைப் பொறுத்தது

### சர்வம் சக்திமயம்

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தமது பத்னியுடன் கிருகஸ்தாசிரமத்தில் இருநது குடும்ப வாழ்க்கையைக

கைக்கொள்ளாததற்குக் காரணமென்ன என்பதை ஒருவர் கேட்டார். அதற்குப் பகவான் பின்வருமாறு பதில் சொன்னார்:

ஒரு நாள் கார்த்திகேய பகவான் தம் நகத்தால் ஒரு பூனையைக் கீறிவிட்டு அன்னையிடம் திரும்பினார். தமது அன்னையின் கன்னத்தில் விரலாற் கீறிய அடையாளம் ஒன்று இருப்பதைக் கண்டார். கண்டதும், 'தாயே! உனது கன்னத்தில் இந்த வடு எப்படி உண்டாயிற்று?' என்று கேட்டார். ஜகன்மாதாவானவள், 'குழந்தாய்! இது உன் கைங்கரியம்தான்! உனது கை நகத்தின் வேலையே,' என்றாள். கார்த்திகேயர் திடுக்கிட்டு 'எப்படியம்மா! நான் உன்னை ஒருபோதும் கீறியதில்லையே' என்றார்.

"குழந்தாய்! இன்று காலையில் நீ ஒரு பூனையைக் கீறியதை மறந்துபோய்விட்டனையா?"

"ஆமாம்; கீறினேன். ஆனால் உன்னுடைய கன்னத்தில் வடு ஏற்பட்டதன் காரணமென்ன?"

"குழந்தாய்! உலகத்தில் உள்ள ஸர்வ ஜீவராசிகளிலும் நான் இருக்கிறேன். ஸகல சிருஷ்டியும் நான்தான். ஆதலால், நீ யாரை வருத்தினாலும் அது என்னை வருத்துவதாக விருக்கும்."

இதைக் கேட்டதும் கார்த்திகேயருக்கு அதிக ஆச்சரியமுண்டாயிற்று. மேலும், அவர் ஒருவரையும் கல்யாணம் பண்ணிக்கொள்வதில்லையென நிச்சயித்தார். ஏனெனில், அவர் யாரைக் கல்யாணம் செய்து கொள்வது? ஒவ்வொரு ஸ்திரீயும் அவருக்குத் தாய் அல்லவா? ஆதலால், அவர் கல்யாணம் செய்துகொள்ளவில்லை.* நான் கார்த்திகேயரைப் போன்றிருக்கிறேன்.

---

*வடநாட்டில் கார்த்திகேயர் எப்போதும் பிரம்மசாரியாகவே இருக்கின்றார் என்ற கொள்கையை மக்கள் கொண்டிருக்கின்றார்கள்.

ஒவ்வொரு ஸ்திரீயும எனக்குத் திவ்ய மாதாவாகவே தோன்றுகின்றனர்.

## 12. பாகவதம் கேட்டது யார்! தாசி வீடு சென்றது யார்?

மனிதனுடைய புண்ணிய பாவங்கள் அவனது மனோ நிலைமையினையும் எண்ணங்களையும் அண்டி இருக்கின்றன. அவை அவன் உள்ளத்திலிருந்து உண்டாவனவேயன்றி வெளிக்கருமங்களால் அல்ல இரண்டு நண்பர்கள் கூடிப் போகையில் ஸ்ரீமத் பாகவதம் வாசிக்கப்படும் இடத்தை யடைந்தனர். அவர்களில் ஒருவன், "நண்பா! இங்கே சற்றுத் தாமதித்து இந்த ஸத்விஷயத்தைக் கேட்கலாமே!" என்றான். மற்றவன், பாகவதத்தைக் கேட்பதினால் என்ன சுகம்? தாசி வீட்டில் போய் இன்பமாகக் காலம் கழிக்கலாம் வா" என்றான். முன்னவன் இதற்கு இணங்கவில்லை. ஆதலால் அவன் பாகவதம் படிக்கப்படும் இடத்தில் உட்கார்ந்து கதை கேட்டுக்கொண்டிருந்தான். மற்றவனோ, தாசி வீட்டுக்குப போனான் என்றாலும் அவனுக்கு அங்கு இன்பமே ஏற்படவில்லை. "அடா! என்ன செய்துவிட்டேன்! இங்கு வந்தது எதற்காக? எனது நண்பனோ ஹரியின் திவ்ய சரித்திரத்தைக் கேட்டுக்கொண்டல்லவோ மகிழ்ந்திருப்பான்" என்று நினைத்துக்கொண்டு, அத் தாசி வீட்டிலிருந்தபோதிலும் ஹரியைப்பற்றியே நினைத்திருந்தான். பாகவதத்தைக் கேட்க உட்கார்ந்தவனுக்கும் இன்பம் உண்டாகவில்லை. "என் நண்பனோடு தாசி வீட்டிற்குப் போயிருந்தால் அவனைப்போல நானும் இன்ப நுகர்ச்சி பெற்றிருக்கலாமே" என்று நினைத்துககொண்டிருந்தான். ஆகவே, இவன் பாகவத படனம் செய்யும் இடத்தில் இருந்தபோதிலும், அதைக் கேட்காமல் தாசி வீட்டைப்பற்றிய சிந்தனையுள்ளவனாக இருந்தபடியால், அங்கு நேரில் போகாது போனாலும், வாஸ்தவத்தில் போவதால் பெறக்கூடிய பாபத்தை அடைந்தான். தாசி வீட்டிற்குச் சென்றவன் பாகவத படனத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்த

படியால், அவனுக்கு அந்தக் கெட்ட விடத்திலும் கூடப் புண்ணியமே கூடிற்று.

## 14. தாசி மோக்ஷமும் சந்நியாசி நரகமும்பெற்ற கதை

ஒரு ஸந்யாசி ஒரு கோவிலுக்குப் பக்கத்தில் வசித்து வந்தார். அவருடைய இருப்பிடத்துக்கு எதிரில் ஒரு தாசியின் வீடு இருந்தது. அந்த வேசியின் வீட்டில், சதா சர்வ காலமும் புருஷர்கள் கூடியிருப்பதைக் கண்ட அந்த ஸந்யாசி, ஒரு நாள் அவளைக் கூப்பிட்டு, "நீ ஒரு பெரும் பாவியாகி விட்டாய் இரவும் பகலும் நீ பாவம் செய்து கொண்டே இருக்கிறாய் உன் கதி என்னவாகுமோ?" என்று கண்டித்தார். தான் செய்த பாவத் தொழில்களுக்குப் பெரிதும் வருந்தி தாசி, வெகுவாக வருத்தப்பட்டுத் தன்னை மன்னித்தருள வேண்டுமென்று உள்ளன்போடு ஈசவரனை நோக்கிப் பிரார்த்தித்தாள் வேசைத்தனமே அவளுடைய குலத் தொழிலாகையால் வேறுவகையால் அவளுக்குக் காலக்ஷேபம செய்யமுடியவில்லை. ஆயினும, வயிற்றுப் பிழைப்புககாக சரீரத்தை விற்றபோதெல்லாம் அவள் உள்ளங்குழைந்து மன்னிப்புவேண்டி ஈசுவர ஸ்துதி செய்வது வழக்கம. ஸந்யாசியோ, தான் சொன்னதைத் தாசி கேட்க வில்லையென்று எண்ணி, இவளுடைய ஆயுட் காலத்துக்குள் எத்தனை பேர் இவளிடம வருகிறார்கள் என்பதைப் பார்க்கவேண்டும் என்று நிச்சயித்துக்கொண்டு, அன்று முதல் அவளைக் கவனிப்பதிலேயே கருத்தாயிருந்தார். யாரேனும் ஒருவர் அந்த வேசியின் வீட்டுக்குள் நுழைநதால், உடனே அந்த ஸந யாசி ஒரு கூழாங்கல்லை எடுத்துப்போட்டு எண்ணிக் கொள்வார். இப்படிப் போட்ட கற்கள் பெரிய குவியலாகக் குவிந்தன. ஒருநாள் அந்த ஸந்யாசி, இந்தக் கற்குவியலைத் தாசிக்குக் காட்டி, "பெண்ணே! இந்த குவியலைப் பார்த்தாயா? நான் எந்தக் காரியத்தைச் செய்யவேண்டாமென்று சொன்னேனோ, அந்தக் காரியத்தை நீ எத்தனை தரம் செய்திருக்கிறாய் என்பதை இந்தக் குவியலில் உள்ள

கற்கள் ஒவ்வொன்றும் தெரிவிக்கும். இன்னும் சொல்லுகிறேன் ; வீணைகக் கெட்டுப்போகாதே'' என்றார். தனது பாபக் குவியலைக் கண்ட தாசிக்கு நடுக்க முண்டாயிற்று. ஆகவே அவள் கண்ணும் கண்ணீருமாய் நின்று உள்ளம் வருந்தி, "ஈசுவரா! இநதத் தீய செய்கையை இனி நான் செய்யாவண்ணம் என் உயிரைக கொண்டுபோக மாட்டாயா?'' என்று பிரார்த்தித்தாள். அந்தப் பிரார்த்தனையின்படியே அவள் உயிரை எமன் அன்றிரவே கொண்டுபோனான். ஈசுவரனுடைய இச்சையை என்னென்று சொல்வது! அதே நாளில் அந்த ஸந்யாஸியும் இறந்துபோனார். வைகுண்டத்திலிருந்து விஷ்ணு தூதர்கள் வந்து அந்தத் தாசியின் உயிரைச் சுவர்க்கததிற்குக் கொண்டுபோக, எமபடர்கள் வந்து நரகத்துக் கொண்டுபோவதற்காக, அநத சநயாசியின் உயிரைக் கட்டிப் பிணித்தனர். தாசியின் நற்கதியை நோக்கிய ஸந்யாசி, "இதுதானா ஈசுவரனுடைய நீதி? ஆயுள் முழுவதும் தவம் செய்த என்னை நரகத்துக்கும, தினந்தோறும் பாபம் செய்த தாசியை மோக்ஷத்துக்கும் கொண்டுபோவது நியாயமா?'' என்று கூறினார். விஷ்ணு தூதர்கள் இதைக் கேட்டு, "ஈசுவரனுடைய ஆக்ஞை எப்போதும் நியாயமானதாகவே இருக்கும். நீ எதை நினைக்கிறாயோ அதையே அனுபவிப்பாய். கௌரவத்தையும் புகழையும் பெறவேண்டி நீ வீண் படாடோபத்துடன் காலங் கழித்தாய். ஈசுவரன் உனக்கு அவற்றைக் கொடுத்தான். உனது மனம் ஒரு போதும் அநதரங்கத்துடன் அவனை நாடினதில்லை. இநத வேசையோ சரீரத்தால் பாபம் செய்தனள் என்றாலும், இரவும் பகலும் மனமார ஈசுவரனைத் துதித்து வநதாள். பூலோகத்தில் உன் சரீரமும் அவள் சரீரமும அடையும் மரியாதையைப் பார். நீ சரீரத்தால் பாபம் செய்ததில்லை. ஆகவே உனது சரீரத்தைப் புஷ்பங்களால் அலங்கரித்து ஆற்றில் இடுவதற்காக மேளதாளத்துடன ஊர்வலம கொண்டு போகின்றனர். பாபம் செய்த இநத வேசையின் உடலை இந்த க்ஷணத்தில் நாயும்

நரியும் பிடுங்கித் தின்கின்றன. என்றாலும் அவள் சுத்த மான மனமுடையவளாதலால் சுவர்க்கத்திற்குப் போகி ருள். உன் மனம் எப்போதும் அவளுடைய பாபச் செயல் களைப் பற்றியே சிந்தித்திருந்தபடியால் அசுத்தமாயிற்று; ஆதலால் நீ அசுத்தாத்மாக்களிடம் போகிருய். வாஸ்த வத்தில் நீதான் பதிதன். அவள் வேசையல்ல" என்று பதில் கூறினர்.

# IV

# அறிவிலிகளின் அபாய வேதாந்தம்

## 15. அரசன் அநுஷ்டித்த அத்வைதம்

"உலகம் பிரம்மமயம்," என்ற திவ்வியமான அத் வைதக் கொள்கையை ஓர் அரசனுக்கு அவனுடைய குரு உபதேசம் செய்தார் இதனால் அரசன் வெகு சந்தோஷம் அடைந்தவனாகி, அரண்மனைக்குள்ளே சென்று தனது பட்ட மகிஷியை நோக்கி, "ராணிக்கும் ராணியின் வேலைக் காரிக்கும் யாதொரு வித்தியாசமுமில்லை. ஆதலால் இது முதல் வேலைக்காரியே ராணியாக இருக்கவேண்டியது," என்றான். இப்படி மதியீனமாகத் தனது நாயகன் சொன்னதைக் கேட்ட ராணி இடிவிழுந்தாற்போலப் பிரமித்துப் போனாள். உடனே அவள் குருவை வர வழைத்து, "ஸ்வாமி தங்களுடைய உபதேசத்தினால் வந்த கெடுதியைப் பாருங்கள்" என்று நடந்த சமாசாரத்தைச் சொல்லி அழுதாள். குரு அவளைத் தேற்றி, "இன்றைய தினம் கலத்தில் அன்னம் பரிமாறும்போது ஒரு சட்டி மலத்தையும் கூட வை," என்று சொல்லிப் போனார். போஜன சமயம் வந்ததும், அரசனும் குருவும் சாப்பிட உட்கார்ந்தனர்! அன்னத்தின் அருகில் மலமும் வைக்கப் பட்டிருந்ததைக் கண்ட அரசனுக்கு அளவு கடந்த கோபம் வந்தது. இதைப் பார்த்த குரு வெகு சாந்தமாக,

“ராஜனே! உனக்கு அத்வைத ஞானம் வெகுவாக உண்டே; மலம் வேறு அன்னம் வேறு என்ற வித்தியாசம எப்படி உனக்கு வந்தது?” என்று கேட்டார். அரசனுக்கு இன்னும் கோபம் அதிகரித்தது. ஆகவே அவன், “அத்வைதி என்று பெருமை பேசிக் கொள்ளுகிற நீர்தாம இந்த மலத்தைச் சாப்பிடும் பார்ப்போம்!” என்றான். “நல்லது” என்று சொல்லிக்கொண்டு, குரு உடனே பன்றியாக மாறி, அத்யந்த சந்தோஷத்துடன் மலத்தை விழுங்கி விட்டு, மறுபடியும் மனித ரூபத்தை எடுத்துக் கொண்டார். அரசன் வெட்கப்பட்டுப் போனான். மறு படியும் அவன் அதைப் போன்ற மதியீனமான பேச்சைத் தன் மனைவியிடம் பேசினதே இல்லை.

## 16. தான் செய்த பழியைப் பிறர்மீது சுமத்தல்

ஒரு பிராம்மணன் புதிதாக ஒரு தோட்டம் உண் டாக்கி அதை இரவு பகலாய்க் காப்பாற்றி வந்தான். ஒரு நாள் ஒரு பசு அத்தோட்டத்துக்குள் நுழைந்து, அப் பிராம்மணன் வெகு அருமையாக வளர்த்துவந்த மாஞ் செடியை மேய்ந்தது. இதனால் கோபங்கொண்ட அப்பிராம் மணன், பசுவை வெகு பலமாய் அடிக்க, அது அடி பொறுக்கமாட்டாமல் இறந்து போய் விட்டது. பிராம் மணன் பசுவைக் கொன்றுவிட்டான் என்ற சமாசாரம் ஒரு நொடியில் ஊரெங்கும பரவியது. பிராம்மணனோ, வேதாந்தி யென்று வேஷம் போட்டவனாதலால், பசுவைக் கொன்ற குற்றத்தை ஒப்புக் கொள்ளாமல், “நான் பசு வைக் கொல்லவில்லை; என் கை கொன்றது. இந்திரன் [illegible] பசுவைக் [illegible] இந்திரனைச் சேர்ந்தது. என்னைச் சேர்ந்ததல்ல” என்று [illegible]ன்.

தேவலோகத்திலுள்ள இந்திரன் இதைக் கேட்டு, ஒரு கிழப் பிராம்மண உருவத்துடன் அந்தத் தோட்டத்துச்

சொந்தக்காரனிடம் வந்து, "சுவாமி! இந்தத் தோட்டம் யாருடையது?" என்று கேட்டான்.

பிராம்மணன் :—என்னுடையது.

இந்திரன் :—இது வெகு நேர்த்தியாக விருக்கிறது. உமது தோட்டக்காரன் கெட்டிக்காரன் போலும். இந்த மரங்கள் வெகு அழகாயும் வரிசையாயும் நடப்பட்டிருக்கின்றன.

பிராம்மணன் இதுவும் நான் செய்ததுதான். மரங்களெல்லாம் என்னுடைய ஏற்பாட்டின்படியேதான், எனது மேற்பார்வையில் என் உத்திரவின்பேரில் நடப்பட்டன.

இந்திரன் :—சரிதான்; நிரம்பவும் அழகாக விருக்கிறது. இந்தப் பாதை யார் போட்டது? வெகு நேர்த்தியாய்ப் போட்டு முடிக்கப்பட்டிருக்கிறது!

பிராம்மணன் :—இதுவும் என் வேலைதான்.

இதைக் கேட்ட இந்திரன், கூப்பிய கையினனாய்; சுவாமி! "இவையெல்லாம் உம்முடையன வென்கிறீர், இந்தத் தோட்டத்தில் செய்யப்பட்டிருக்கும் வேலைகளுக்கெல்லாம் கீர்த்தி உமக்கு வரவேண்டுமென்கிறீர். ஆனால், பசுவைக் கொன்ற தோஷத்துக்கு மட்டும் ஏழை இந்திரனை உட்படுத்துவது நியாயமா?" என்றான்.

## 17. 'கடிக்காதே, ஆனால் பயமுறுத்து'

ஒரு பொந்தில் ஒரு பாம்பு வசித்து வந்தது. அவ்வழியாக யார் சென்றபோதிலும் அவர்களை அது கடித்து வந்ததாதலால் அப்பக்கம் ஒருவரும போவதில்லை. ஒருநாள் சாது ஒருவர் அவ்வழியே போகும்போது அவரைக் கடிக்கவேண்டுமென்று அப்பாமபு அவரைப் பின் தொடர்ந்து ஓடிற்று. ஆனால் அவரைச் சமீபித்ததும் அவருடைய மஹிமையால் பாம்பிக்கிருந்த மூர்க்கம் முழு

வதும் போய்விட்டது. அந்த மஹான் பாம்பைப் பார்த்து "நண்பா! என்னைக் கடிக்க நினைக்கிறாயா?" என்று கேட்டார். பாம்பு வெட்கப்பட்டுப் பதில் சொல்லாமலிருந்தது. அதன்மேல் அந்த யோகி, "நண்பா! கேள். இனிமேல் ஒருவருக்கும தீங்கு செய்யாதே" என்று சொல்லிப் போனார். அவர் சொல்லுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகப் பாம்பு தலையை அசைத்தது. மஹான் போனபிறகு பாம்பு தன் புற்றில் புகுந்துகொண்டு அந்த க்ஷணமுதல் யாருக்கும் தீங்கு செய்ய நினைக்காமல் வாழத் தொடங்கியது. இப்படியாகச் சில நாட்கள் கழிந்ததும் அவ்வூர் ஜனங்கள், இந்தப் பாம்புக்கு விஷமெல்லாம் போய்விட்டது; இனி ஒருவரையும் கடிக்காது என்று நினைத்து அதைத் தொந்தரவு செய்ய ஆரம்பித்தனர். சிலர் அதன்மீது கற்களை எறிந்தார்கள்; வேறு சிலர் இரக்கமின்றி அதன் வாலைப் பிடித்து இழுத்தார்கள். இப்படியாக அதற்கு நேர்ந்த உபத்திரவத்துக்கு அளவேயில்லை. அதிருஷ்டவசமாய் முன் வந்துபோன சாது அவ்வழியாய் மறுபடியும் வந்தார். அதன் உடம்பெல்லாம் புண்ணாகி மெலிந்திருப்பதைப் பார்த்தார். அப்படியானதின் காரணத்தை அறிய வேண்டி "நடந்த சங்கதி என்ன?" என்று கேட்டார். "சுவாமி, தங்கள் உபதேசப்படி நான் இப்போது ஒருவருக்கும் தீங்கு செய்வதில்லை. அதன் பயன் இது. ஜனங்கள் இரக்கமில்லாமல் என்னைத் தொந்தரவு செய்கிறார்கள்," என்றது பாம்பு. யோகி இதைக்கேட்டு, புன்சிரிப்புக்கொண்டு "நண்பா! யாரையும் கடிக்கவேண்டாம் என்று மட்டும் உனக்குச் சொன்னேன். ஒருவரையும் பயமுறுத்த வேண்டாம் என்று நான் சொல்லவில்லையே. நீ ஒருவரையும் கடிக்க வேண்டாம். ஆனால் பிறர் உன்னிடம் வந்து தொந்தரவு செய்யாதிருக்கும்படி நீ சீறிச் சப்தமிட்டுப் பயமுறுத்தி அவர்களை உன்னருகில் வராமலிருக்கும்படி செய்துகொள்ளவேண்டும்" என்று சொன்னார். அது போல, நீ உலகததில் வாழ்ந்திருக்கும் வரையில் பிறர் உன்னிடம் அச்சமும் மரியாதையும் கொள்ளும்படி நட

ஆனால், ஒருவருக்கும் தீங்கு செய்யாதே. பிறரால் உனக்குத் தீங்கு வாராதபடியும் காத்துக்கொள்.

## 18. அரைகுறையான அத்வைதம்

“உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் ஈசுவர சொரூபங்களே” என்று ஒரு குரு தனது சிடனுக்கு உபதேசித்தார். சிஷ்யனோ இதன் வாஸ்தவமான அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளாமல் சொல்லர்த்தத்தைமட்டும தெரிந்து கொண்டிருந்தான். ஒரு நாள் அவன் தெருவழியாகப் போய்க்கொண்டிருக்கையில் எதிரே வந்த ஒரு யானையைக் கண்டான். யானையின் மீதிருந்த பாகன், “விலகு, விலகு” என்று கூவிக்கொண்டிருந்தான். “நான் ஏன் விலக வேண்டும்? நானும் ஈசுவரன், இந்த யானையும் ஈசுவரன்; ஈசுவரன் ஈசுவரனுக்கு ஏன் பயபபட வேண்டும்?” என்று நினைத்துக் கொண்டு சிஷ்யன் விலகாமலிருந்துவிட்டான். பிறகு யானை சமீபித்து இந்தச் சிஷ்யனைத் துதிக்கையால் தூக்கி அப்பால் போட்டுச் சென்றது. அதனால் நேர்ந்த காயங்களுடன் அவன் குருவை அணுகி நடந்த சங்கதிகளைச் சொன்னான். “எல்லாம் சரிதான்; நீயும் ஈசுவரன், அந்த யானையும ஈசுவரனே. ஆனால் மேலேயிருந்த பாகனை ஈசுவரன் உன்னை எச்சரித்து வந்தானே. ஏன் நீ கவனிக்கவில்லை?” என்று குரு கேட்டார்.

# V

# மதப்பித்து

## 19. ‘கண்டா கர்ணன்’

மத வைராக்கியத்தில் கண்டா கர்ணனைப்போல இராதே. ஒருவன் சிவனை மட்டும் ஆராதித்து மற்றத் தெய்வங்களை யெல்லாம் தூஷித்து வந்தான். ஒருநாள் அவனுக்குப் பரமசிவன் பிரத்யக்ஷமாய், “நீ மற்றத் தெய்

வங்களைத் தூஷிக்கிற வரையில் உன்மீது எனக்குப் பிரியம் உண்டாகாது" என்றனர். ஆகவே அவன் மௌனமாக விருந்தான். சில நாட்களுக்குப் பிறகு மறுபடியும் ஒரு தினம் அவனுக்குப் பரமசிவன் பிரத்யக்ஷமானார். இப்போது அவர் ஹரிஹர ரூபத்தில் அதாவது ஒரு பாதி விஷ்ணுவாகவும் மற்றொரு பாதி சிவனாகவும் தோன்றினார். இதைக் கண்டதும அவனுக்குப் பாதி விருப்பும் பாதி வெறுப்பும் உண்டாயிற்று. சிவ ரூபமுள்ள பாகத்தில் நைவேத்தியங்களைச் சமர்ப்பித்து விஷ்ணு ரூபமுள்ள பாகத்துக்கு ஒன்றும் செய்யாதிருந்தான். அப்பால் பரமசிவன், "அடே, உனது வைராக்கியம் அசாத்தியமானது! எல்லாத் தேவ தேவிகளும் ஒரே பரம்பொருளின் தோற்றங்கள் என்பதை உனக்குத் தெளிவிக்க வேண்டியே நான் இந்த இரட்டை உருவத்தோடு தோன்றினேன். இதை நீ அறிந்துகொள்ளவில்லை. இந்தக் குற்றத்துக்காக நீ நெடுங்காலம் துன்பப்படக்கடவாய்" என்று சொல்லி மறைந்தனர். அம்மனிதன், அப்பால் ஒரு கிராமத்துக்குச் சென்று காலங் கழிக்கத் தொடங்கினான். அவன் பரம விஷ்ணுத் துவேஷியாயிருந்ததைக் கண்ட அக் கிராமத்துப பிள்ளைகள் அவன் காதுகளில் விஷ்ணு நாமமே விழும்படிக் கூறி அவனைத் தொந்தரவு செய்ய ஆரம்பித்தனர். ஆகவே அவன் விஷ்ணு நாமங்கள் தன் காதில் விழாம லிருப்பதற்காக இரண்டு காதுகளிலும் இரண்டு மணிகளைத் தொங்கவிட்டுக்கொண்டு பையன்கள் விஷ்ணு நாமத்தைச சொல்லும்போதெல்லாம் அநதச் சத்தம் கேட்காமலிருக்கும்படி அம்மணிகளை ஆட்டிக்கொள்வான். இதனால் அவனுக்குக் "கண்டா கர்ணன்" (மணி தொங்கும காதுகள் உள்ளவன்) என்ற பெயர் வந்தது.

## 20. குருடர் கண்ட யானை

நான்கு குருடர்கள் சேர்ந்து யானை யொன்றைப் பார்க்கப் போனார்கள். அவர்களில் ஒருவன் யானையின் காலைத் தொட்டுப் பார்த்து, "யானை தூணைப்போலிருக்

